12th August 1965]

SRI K. S. ABDUL WAHAB : In view of our plans for storing huge stocks of rice and paddy, etc., is it not advisable to use these chemically impregnated jute bags, Sir?

THE HON. SRI V. RAMAIAH : It has been tried in certain Central Government godowns and the experts' advice is against the use of this type of bags.

DR. H. V. HANDE : The Hon. Minister said that the advice of the experts was that these bags were unfit for storing foodgrains. Is it because it is poisonous or for any other reason, Sir?

THE HON. SRI V. RAMAIAH : Chemicals used in the bags are not good for foodstuffs.

*Production of Khadi*

*119 Q.—SRI K. S. ABDUL WAHAB : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(a) the quantity of Khadi produced in the State during 1963–64;

(b) the target fixed for the production of Khadi during 1964–65; and

(c) amount allotted by the State Government for this purpose?

கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் : (அ) 1963-64-ம் ஆண்டில் கதர்த் துறை உற்பத்தி செய்த கதரின் மதிப்பு ரூ. 1,25,85,000 ஆகும்.

(இ) 1964-65-ம் ஆண்டில் கதர்த் துறையின் கதர் உற்பத்தி இல்லை மதிப்பு ரூ. 127 லட்சத்தில் உற்பத்தி மதிப்பு ரூ. 139 லட்சமாகும்.

(உ) மானிய ரீதியில் கதர் உற்பத்திக்காகவும், விற்பனைக்காகவும் மாநில அரசாங்கம் எந்தவிதமான கடனோ, மானியமோ வழங்குவதில்லை.

SRI K. S. ABDUL WAHAB : What is the amount allotted by the Central Government for the Khadi Scheme for our State during the period in question, Sir?

கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் : கமிஷனிலிருந்து லோன் கொடுக்கிறார்கள். அந்த லோனை வாங்கி திரும்ப நாம் கொடுத்துக்கொண்டிருக்கிறோம். அவர்கள் லோனைத்தான் கொடுக்கிறார்கள்.

SRI K. S. ABDUL WAHAB : May I know the profit and loss account of this Khadi scheme for the period in question ?

THE HON. SRI N. S. S. MANRADIAR : I have no such information.

**திரு. எஸ். கே. சம்பந்தன்** : கதர் உற்பத்தித் தொழிலில் ஈடு பட்டுள்ள மக்களின் எண்ணிக்கை என்ன என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார்** : இந்தக் கேள்வியில் அதற்கு விவரமில்லை.

SRI K. S. ABDUL WAHAB : May I know the number of shops in which Khadi is sold in our State ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார்** : அந்தத் தகவல் என்னிடமில்லை.

**திரு. க. அன்பழகன்** : தலைவர் அவர்களே, 1963-64-ல் உற்பத்தி செய்யப்பட்ட 127 லட்சம் ரூபாய் அளவு மதிப்புள்ள கதரில் இது வரையில் எவ்வளவு விற்பனையாகியிருக்கிறது ? எவ்வளவு தேங்கி யிருக்கிறது ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார்** : சார், அந்தத் தகவல் என்னிடமில்லை.

### *Co-operative Farms*

3-20 p.m. * 120 Q.—DR. H. V. HANDE : Will the Hon. the Minister for Co-operation be pleased to state with reference to the answer given to Legislative Council Question No. 121 on 8th March 1965 :—

(*a*) the total acreage brought under co-operative farms in Tamilnad;

(*b*) the total yield of paddy from co-operative farms :

(*c*) whether there has been any substantial increase in yield on account of co-operative farms; and

(*d*) the basis on which forms are brought under the co-operative farm scheme ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார்** : (அ) தமிழ்நாட்டில் 42,914 ஏக்கர் 92 சென்ட் நிலம் பல்வேறு வகைக் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின்கீழ்க் கொண்டுவரப்பட்டுள்ளது.

(இ) 1,12,415 குவிண்டல் (ஒரு லட்சத்து பன்னிரண்டா யிரத்து நானூற்றுப் பதினைந்து குவிண்டல்) நெல் விளைந்தது. அதன் மதிப்பு ரூ. 36,29,306 (முப்பத்தாறு லட்சத்து இருபத் தொன்பதாயிரத்து முன்னூற்று ஆறு ரூபாய் மட்டும்) ஆகும்.

(உ) கூட்டுறவுப் பண்ணையின்கீழ்க் கொண்டுவரப்பட்ட நிலங் களிலிருந்து கிடைத்த விளைச்சல், அவை அவ்வாறு கூட்டுறவுப் பண்ணையின்கீழ் கொண்டுவரப்படுவதற்கு முன்பு அவற்றில் கிடைத்த விளைச்சலைவிட அதிகமாகவே இருந்தது.

(எ) தனித்தனி பட்டாதார்களின் பட்டா நிலங்களை ஒருங்கு சேர்ப்பதன்மூலம் கூட்டுப் பண்ணைச் சங்கங்கள் அமைக்கப்படு கின்றன. பட்டாதார்கள் அவற்றில் அங்கத்தினர்களாகச்